ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2017 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தரப்) பரீட்சை, 2017 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2017

ඉස්ලාම් ශිෂ්ටාචාරය I
இஸ்லாமிய நாகரிகம் I
Islamic Civilization I

47 T I

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
Two hours

**அறிவுறுத்தல்கள் :**

* **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
* விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை** எழுதுக.
* விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.
* **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் **புள்ளடி** (×) இடுவதன் மூலம் காட்டுக.

**1.** பின்வருவனவற்றுள் மிகச் சரியான கூற்றைத் தெரிவுசெய்க.
(1) பிரபல்யமான நான்கு மஸ்ஹபுகளில் முதலில் தோற்றம் பெற்றது ஹனபி மஸ்ஹப் ஆகும்.
(2) இலங்கை முஸ்லிம் தனியார் சட்டம் ஆங்கிலேயர் காலத்திலேயே அறிமுகமாகியுள்ளது.
(3) கவர்னர் மூஸா பின் நுஸைரின் வழிகாட்டலின் கீழ் முஹம்மது பின் காஸிம் இந்தியாவைக் கைப்பற்றினார்.
(4) அப்பாஸியர் காலத்தில் அறபு மொழி அரச மொழியாகப் பிரகடனப்படுத்தப்பட்டது.
(5) இமாம்களான புஹாரி (ரஹ்), முஸ்லிம் (ரஹ்) ஆகியோரால் அறிவிப்புச் செய்யப்பட்ட ஹதீஸ்கள் 'தபகாத்' என அழைக்கப்படுகின்றன.

**2.** 'சுல்தானுல் ஹின்த்' எனும் பெயரால் பாராட்டப்பட்ட, இந்தியாவில் இஸ்லாத்தின் பரவலில் பெரும் பங்கு கொண்டவர்
(1) ஷேக் அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்)
(2) ஷேக் ஹாஜா மொஹிதீன் ஜிஸ்தி (ரஹ்)
(3) மன்னர் ஔரங்கஸீப்
(4) இமாம் ஷாஹ்வலியுல்லாஹ் (ரஹ்)
(5) ஷேக் நிழாமுதீன்



**3.** 'மா ரக லே' (என்னைப் பாதுகாத்த இரத்தம்) என்ற வார்த்தைகளால் சிங்கள மன்னரின் பாராட்டைப் பெற்ற மன்னனுக்காகத் தன்னுயிர் நீத்த முஸ்லிம் பெண்மணி வாழ்ந்த இடம்
(1) தென்னகும்புரை
(2) பங்கரகம்மான
(3) கடுகண்ணாவை
(4) தன்துரே
(5) கஹடபிடிய



**4.** இமாம் மாலிக் (ரஹ்) அவர்களது நூல்
(1) பிக்ஹுல் அக்பர்
(2) தாதுல் மஆத்
(3) அல்-முவத்தா
(4) பிக்ஹுஸ்ஸுன்னா
(5) மின்ஹாஜுத் தாலிபீன்

**5.** பன்னூல் ஆசிரியரான மருத்துவ மேதை அலி பின் ஸீனாவின் நூல் **அல்லாதது**
(1) கானூன் பித்திப்பி
(2) அல்-ஹாவி
(3) கிதாபுஸ் ஸிபா
(4) அதவியதுல் காலிபா
(5) ஹுதூத் அத் திப்பி

**6.** பின்வருவோருள் மதீனா ஹிஜ்ரத்துடன் **தொடர்புபடாதவர்**
(1) அபூபக்ர் (ரழி)
(2) அஸ்மா பின்த் அபீபக்ர் (ரழி)
(3) அப்துல்லாஹ் பின் உரைகத்
(4) ஸஃத் பின் மஆத் (ரழி)
(5) ஆமிர் பின் புஹைரா

**7.** ஸ்பெயினில் முஸ்லிம் ஆட்சி நிலவிய காலப்பகுதி
(1) கி.பி. 661 - கி.பி. 750
(2) கி.பி. 750 - கி.பி. 1258
(3) கி.பி. 756 - கி.பி. 1492
(4) கி.பி. 1326 - கி.பி. 1924
(5) கி.பி. 1526 - கி.பி. 1857

**8.** 'இலங்கைச் சோனகர் வரலாறு - ஒரு திறனாய்வு' என்ற நூலின் ஆசிரியர்
(1) கலாநிதி எம். ஏ. எம். சுக்ரி
(2) எம். எம். எம். மஹ்றூப்
(3) அறிஞர் ஏ. எம். ஏ. அஸீஸ்
(4) ஐ. எல். எம். ஏ. அஸீஸ்
(5) அறிஞர் எம். சி. சித்திலெவ்வை

**9.** அல்-குர்ஆனுக்கு அடுத்த நிலையிலுள்ள மிகப் பலமான ஆதாரம்
(1) முதவாதிர் தரத்திலான ஹதீஸ்
(2) அல்-ஹதீஸ்-அல்-குத்ஸி
(3) அஸ்-ஸஹீஹ்
(4) முத்தபகுன் அலைஹி
(5) அல்-மஷ்ஹூர்

[பக். 2 ஐப் பார்க்க

**10.** 'இஜ்திஹாத்' என்பதன் சுருக்கமான கருத்து
(1) சட்ட மூலாதாரம்
(2) தீர்ப்பொன்றைப் பெறுவதற்காக எடுக்கப்படும் முயற்சி
(3) முஜ்தஹிதீன்களின் கூட்டமைப்பு
(4) மார்க்க விவகாரங்களில் அறிஞர்களது நிலைப்பாடு
(5) முஸ்லிம் சமூகத்தாரிடையே எழும் சமய சம்பந்தப்பட்ட விவகாரங்கள்

**11.** இலங்கை அமைச்சரவையொன்றில் வெளிநாட்டமைச்சராகப் பணியாற்றிய பாராளுமன்ற உறுப்பினர்
(1) ஏ. சீ. எஸ். ஹமீத் (2) கலாநிதி டீ. பி. ஜாயா (3) எம். எச். எம். அஷ்ரப்
(4) கலாநிதி பதியுதீன் மஹ்முத் (5) டாக்டர். எம். சீ. எம். கலீல்

**12.** மேல்வரும் கூற்றுகளைக் கருதுக.
A – இஜ்மாஉல் அக்ஸரிய்யா அங்கீகாரம் பெற்ற இஜ்மா.·. ஆகும்.
B – குருதிச் சுற்றோட்டம் பற்றி மருத்துவ அறிஞர் இப்னு நபீஸ் கருத்துப் பரிமாறியுள்ளார்.
C – கோயாஜான் கொழும்புத் துறைமுகத்தில் செல்வாக்குப் பெற்றிருந்த முஸ்லிம் தலைவர் ஒருவராவார்.
D – தௌஹீத், நம்பிக்கை சார்ந்தது, நடைமுறை சார்ந்தது என வகைப்படுத்தப்பட்டுள்ளது.
E – உலக வாழ்வையும் அதன் இலக்குகளையும் புரிந்துகொள்வதற்குப் பிரபஞ்சம் பற்றிய அறிவு அவசியமாகின்றது.
F – ஹன்த்க் யுத்தத்தின்போது ஹுப்பாப் பின் முன்ஸிர் (ரழி) இன் நிபுணத்துவ அறிவை நபியவர்கள் ஏற்றுக்கொண்டார்கள்.

இவற்றுள் **பிழையான** கூற்றுகள்
(1) A யும் B உம் (2) B யும் C யும் (3) B யும் E உம்
(4) C யும் F உம் (5) D யும் E உம்

**13.** இமாம் ரஷீத் ரிழா (ரஹ்) அவர்களது பங்களிப்புடன் அமைந்த அல்-குர்ஆன் விளக்கவுரை
(1) தப்ஸீர் இபுனு கஸீர் (2) தப்ஸீர் பீ ழிலாலில் குர்ஆன் (3) தப்ஸீர் அல்-மனார்
(4) தப்ஸீர் தப்ஹீமுல் குர்ஆன் (5) தப்ஸீர் அத் தபரீ

**14.** இஸ்லாமிய வரலாற்றில் 'பைசாந்தியர்' என அழைக்கப்பட்டவர்கள்
(1) பாரசீகர்கள் (2) உரோமர்கள் (3) எகிப்தியர்கள்
(4) யெமனியர்கள் (5) அரேபியர்கள்

**15.** 'ஹதீஸ் குத்ஸி' எனப்படுவது
(1) முதவாதிர் தரத்திலான ஹதீஸ்கள்
(2) அல்லாஹ் கூறினான் என நபியவர்கள் குறிப்பிட்டுக் கூறிய ஹதீஸ்கள்
(3) நபிகளாரின் குணப் பண்புகள், உருவத் தோற்றம் பற்றிப் புலப்படுத்தும் ஹதீஸ்கள்
(4) இபாதத்களுடன் மாத்திரம் தொடர்புபடுகின்ற ஹதீஸ்கள்
(5) இஸ்னாத், மதன் இரண்டும் சரிவர அமைந்த ஹதீஸ்கள்

**16.** பின்வருவன மு.·.தஸிலா, அஷ்அரிய்யா சிந்தனைப் பிரிவுகளது கருத்துகள் சிலவாகும்.
A – அல்-குர்ஆன் படைக்கப்பட்ட ஒன்று.
B – பகுத்தறிவை விட வஹியிற்கே முக்கியத்துவம் அளிக்கப்படல் வேண்டும்.
C – பாவம் செய்தவர்களுக்கு மறுமையில் ஷபாஅத் கிடைக்கமாட்டாது.
D – நல்லடியார்கள் அல்லாஹுத்தஆலாவை மறுமை நாளில் வெற்றுக் கண்களால் பார்ப்பர்.
E – பெரும்பாவம் செய்தவர்களை அல்லாஹ் நாடினால் மன்னிப்பான் அல்லது தண்டிப்பான்.
F – பாவம் செய்பவன் மு.·.மினுமல்ல; காபிருமல்ல. அவன் பாஸிக் என்றே அழைக்கப்படல் வேண்டும்.

இவற்றுள் அஷ்அரிய்யாக்களது கருத்துகளைச் சுட்டும் கூற்றுகள் யாவை ?
(1) A, C, D (2) A, C, F (3) B, C, E (4) B, D, E (5) C, D, E

**17.** மொகலாய ஆட்சியாளரான ஔரங்கஸீப் அவர்களின் காலத்தில் தொகுக்கப்பட்ட இஸ்லாமிய சட்ட நூல்
(1) மஜல்லதுல் அஹ்காமில் அத்லிய்யா (2) பதாவா இபுனு தைமியா
(3) அல்-மஜ்மூ.·. (4) அ.·.லாமுல் முவக்கிஈன்
(5) பதாவா ஆலம்கீரி

**18.** கலீபா அபூபக்ர் (ரழி) காலத்தில் தாமும் நபி எனக் குரலெழுப்பியவர்களில் பனூதமீம் கோத்திரத்தைச் சேர்ந்த நபர்
(1) முஸைலமா (2) ஸஜா (3) துலைஹா
(4) அஸ்வத் அன்ஸி (5) மாலிக் பின் துவைரா

**19.** டீ. பி. ஜாயாவுக்கு கலாநிதிப் பட்டம் வழங்கிய பல்கலைக்கழகம்
(1) கொழும்புப் பல்கலைக்கழகம் (2) அலிகார் பல்கலைக்கழகம் (3) கராச்சி பல்கலைக்கழகம்
(4) கேம்பிரிஜ் பல்கலைக்கழகம் (5) சிட்டகொங் பல்கலைக்கழகம்

[பக். 3 ஐப் பார்க்க

**20.** வட்ட அமைப்பையும் உயிர்க்குறியீடுகளையும் புள்ளிகளையும் கொண்ட எழுத்து வடிவம்
(1) ரிகா (2) நஸ்கு (3) முஹக்கிக் (4) றைஹானி (5) கூபி

- **21** தொடக்கம் **25** வரையான ஒவ்வொரு வினாவிலும் இரண்டு கூற்றுகள் வீதம் தரப்பட்டுள்ளன. அக்கூற்றுகள் பற்றிய மிகப் பொருத்தமான தொடர்பைக் காட்டும் சரியான விடையினைப் பின்வரும் அட்டவணையிலுள்ள இலக்கம் (1), (2), (3), (4), (5) என்பவற்றிலிருந்து தெரிவுசெய்க.

| இலக்கம் | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| (1) | சரியானது. | சரியானது. |
| (2) | சரியானது. | பிழையானது. |
| (3) | பிழையானது. | பிழையானது. |
| (4) | பிழையானது. | சரியானது. |
| (5) | சரியானது. | முதலாம் கூற்றைத் தெளிவாக விளக்குகிறது. |

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| **21.** | கவர்ணர் ஹுஜ்ஜாஜ் பின் யூசுபின் கொடுமைக்கு அஞ்சி ஹாஷிமீக்களில் சிலர் இலங்கையில் குடியேறியதாக அலெக்சாண்டர் ஜோன்ஸ்டன் குறிப்பிட்டுள்ளார். | அனைத்து மஸ்ஹப்களும் இஜ்திஹாதை அங்கீகரித்துள்ளமையை இஜ்திஹாத் அனுமதிக்கப்பட்ட ஒன்று என்பதற்கான இஜ்மா∴வான ஆதாரமாகக் குறிப்பிடலாம். |
| **22.** | இஸ்லாமிய ஆட்சியில் திம்மீக்களிடமிருந்து அறவிடப்பட்ட ஆள்வீத வரியை 'கராஜ்' என அழைப்பர். | ஸப்இய்யா, கைஸானிய்யா போன்றன ஷீஆக்களின் மிதவாதப் பிரிவுகள் சிலவாகும். |
| **23.** | நூருதீன் அஹமத் அஷ்-ஷாதுலி, அல்ஜீரியாவில் ஷாதுலிய்யாத் தரீக்காவைத் தோற்றுவித்தார். | அநியாயக்கார ஆட்சியாளருக்கெதிராகப் போராடுவது கடமையாகும் என காரிஜீக்கள் கூறுவர். |
| **24.** | இமாம் ஷமஹ்ஷரீயின் 'தப்ஸீருல் கஷ்ஷாப்', தத்துவ சிந்தனைகளை முன்னிலைப்படுத்தி எழுதப்பட்டுள்ளது. | இன, மொழி, பிரதேச, கோத்திரவெறி போன்றனவும் மௌழூஆன ஹதீஸ்கள் தோற்றம் பெறக் காரணமாயமைந்தன. |
| **25.** | "மத்திய காலத்தின் தொடக்கத்தில் அரேபியரைப் போல் வேறு எவரும் மனித முன்னேற்றத்துக்குப் பங்களிப்புச் செய்யவில்லை" என்று பேராசிரியர் பிலிப் கே ஹிட்டி குறிப்பிட்டுள்ளார். | கி.பி. 1099 இல் சிலுவை வீரர்கள், ஜெருஸலத்தை வெற்றிகொண்டபோது அங்கு விஜயம் செய்த ரெமோண்ட் என்ற தளபதி, பிணக்குவியல்களைக் கடந்து சென்றே மஸ்ஜிதுல் அக்ஸாவைப் பார்வையிட்டார் என்பது வரலாற்று உண்மையாகும். |

**26.** கலீபா உஸ்மான் (ரழி) அவர்கள் 'துன்னூரைன்' என அழைக்கப்பட்டமைக்கான காரணம்
(1) நபிகளாரின் இரண்டு புதல்விகளை ஒன்றன் பின் ஒன்றாக மணம் முடித்தமை
(2) ஹபஷா, மதீனா நோக்கிய இரண்டு ஹிஜ்ரத்களிலும் பங்கு கொண்டமை
(3) பி∴ரு ருமாவை விலைக்கு வாங்கி, இறைபாதையில் தர்மஞ்செய்து, நீர்ப் பிரச்சினையைக் களைய உதவியமை
(4) அல்-குர்ஆனை திலாவத் செய்வதில் ஒருமித்த தன்மையை ஏற்படுத்தியமை
(5) ஹுதைபிய்யா உடன்படிக்கையின்போது ஸஹாபாக்கள் இவருக்காக உயிருள்ளவரை போராடுவதாக பைஅத் செய்தமை

**27.** 'ஹுஜ்ஜதுல்லாஹ் அல்-பாலிஆ' என்ற நூலின் ஆசிரியர்
(1) இமாம் கஸ்ஸாலி (ரஹ்) (2) இமாம் ஷாஹ்வலியுல்லாஹ் (ரஹ்)
(3) இமாம் முஹம்மது அப்துஹு (ரஹ்) (4) இமாம் ஸுஹ்ரி (ரஹ்)
(5) இமாம் ஸிர்ஹின்த் (ரஹ்)

**28.** "அல்லாஹ்வின் மீது ஆணையாக, மலைகளுள் ஒன்றை நகர்த்துமாறு கேட்கப்பட்டிருந்தால் அது அல்-குர்ஆனை ஒன்றுதிரட்டுவதை விட இலகுவானதாக இருந்திருக்கும்" என்று கூறியவர்
(1) உமர் (ரழி) (2) ஹுதைபதுல் யமானி (ரழி)
(3) அபூபக்ர் (ரழி) (4) அபூஹுஸைமா அல்-அன்ஸாரி (ரழி)
(5) ஸைத் பின் ஸாபித் (ரழி)

**29.** இமாம் அபூயூஸுப் (ரஹ்) அவர்களின் ஆசிரியராக இருந்தவர்
(1) இமாம் அபூஹனீபா (ரஹ்) (2) இமாம் மாலிக் (ரஹ்) (3) இமாம் ஷாபிஈ (ரஹ்)
(4) இமாம் அஹ்மத் (ரஹ்) (5) இமாம் தாவூத் (ரஹ்)

[பக். 4 ஐப் பார்க்க

5061

**30.** சுறாகா பின் மாலிக் என்பவரை அறிமுகம் செய்வதற்கான மிகப் பொருத்தமான நிகழ்வு
(1) கலீபா யஸீதுடைய காலத்தில் கொன்ஸ்தாந்துனோபில் படையெடுப்பில் பங்கு கொண்டமை
(2) நபிகளாரின் மறைவின் பின் ஸகீபது பனீ ஷஈதாவில் கருத்துப் பரிமாறியமை
(3) கலீபா உஸ்மான் (ரழி) காலத்தில் ஏற்பட்ட அமைதியின்மைக்குத் தலைமைதாங்கியமை
(4) நபிகளார் மதீனாவுக்கு ஹிஜ்ரத் சென்றபோது குறைஷியரின் அன்பளிப்பைப் பெறும் நோக்கில் நபிகளாரைப் பிடிக்கச் சென்று பாலைவனத்தில் புரண்டமை
(5) ஹன்தக் யுத்தத்தின்போது எதிர்தரப்பாரிடையே சென்று அவர்களிடையே அவநம்பிக்கை ஏற்படுத்தியமை

**31.** கீழே **X** நிரலில் சில நூல்களின் பெயர்களும் **Y** நிரலில் நூலாசிரியர்கள் பெயர்களும் தரப்பட்டுள்ளன.

| X | Y |
|---|---|
| (i) கிதாபுல் ஹின்த் | A – அபூரிஹான் பிரூனி |
| (ii) கிதாபுத் தஸ்ரீப் | B – இஸ்ஹாக் பின் யஸார் |
| (iii) புதூஹுல் புல்தான் | C – இபுனு கல்தூன் |
| (iv) கிதாபுல் மகாஸி | D – அஸ்ஸஹ்ராவி |
| (v) அல்-முகத்திமா | E – அல்-பலாதூரி |

மேலே **X** நிரலுக்கமைய **Y** நிரல் ஒழுங்குபடுத்தப்பட்டுள்ள விடை யாது ?
(1) ACBDE (2) ADEBC (3) BADEC (4) BCAED (5) CBEAD

**32.** 'முஸ்லிம் காடியன்' என்ற பத்திரிகையை வெளியிட்டவர்
(1) ஐ. எல். எம். ஏ. அஸிஸ் (2) கலாநிதி டீ. பி. ஜாயா (3) எம். சீ. அப்துர் ரஹ்மான்
(4) சேர். ராஷிக் பரீத் (5) எம். எச். எம். அஷ்ரப்

**33.** 'தீனே இலாஹி' என்ற சிந்தனையை முன்வைத்த மொகலாய மன்னன்
(1) பாபர் (2) அக்பர் (3) ஷாஜஹான் (4) ஹுமாயூன் (5) ஜஹான்கீர்

**34.** பின்வருவனவற்றுள் **பிழையான** கூற்று யாது ?
(1) இஸ்லாமிய நாகரிகம் தௌஹீத், ரிஸாலத், மஆத் எனும் முப்பெரும் தூண்களில் கட்டியெழுப்பப்பட்டுள்ளது.
(2) ஒரு விடயத்தில் இரண்டு தீர்வுகள் இருந்தால் அவற்றுள் இலகுவானதைத் தெரிவுசெய்வது நபியவர்களின் வழிமுறையாக இருந்தது.
(3) ஒரு மு.்மினின் இரண்டு நாட்கள் ஒரே விதமாக அமையக்கூடாது என்பது ஹதீஸ் கூற்றொன்றாகும்.
(4) இஸ்லாமிய அகீதாவைப் பாதுகாப்பதில் இமாம் அஹ்மத் பின் ஹன்பல் (ரஹ்) எடுத்த முயற்சி வெற்றியைத் தந்தது.
(5) நபிகளாரின் மி.்ராஜ் நிகழ்வை முதலில் ஏற்றுக்கொண்ட பெண்மணி ஆயிஷா (ரழி) ஆவார்கள்.

**35.** பஸரா மஸ்ஜிதில் ஆசிரியர்-மாணவர் கருத்து முரண்பாட்டின் விளைவாகத் தோன்றிய சிந்தனைப் பிரிவு
(1) அல்-அஷ்அரிய்யா (2) அல்-முர்ஜிஆ (3) அல்-மு.்தஸிலா
(4) அஷ்-ஷீஆ (5) அல்-ஜபரிய்யா

**36.** மாப்பிள்ளை லெவ்வை ஆலிம் அவர்களால் ஸ்தாபிக்கப்பட்ட அறபுக் கல்லூரி
(1) மக்கிய்யா மத்ரஸா (2) பாரி மத்ரஸா (3) காஸிமிய்யா மத்ரஸா
(4) அல்-பஹ்ஜதுல் இபுறாஹீமிய்யா (5) அல்-மின்னதுல் பாஸிய்யா

● பின்வருவன இஸ்லாமிய அரசியல் வரலாற்றில் பிரபல்யம் பெற்ற சிலரின் பெயர்களாகும். அவற்றைப் பயன்படுத்தி **37 – 41** வரையிலான வினாக்களுக்கு விடை தருக.

A – முஇஸ்ஸுத் தௌலா B – ஜ.்பர் அல்-மன்ஸூர் C – ருக்னுத் தௌலா
D – அப்துல் மலிக் பின் மர்வான் E – இமாதுதீன் ஸன்கீ F – அல்-முஸ்த.்ஸிம்
G – நூருதீன் ஸன்கீ H – ஹாரூன் ரஷீத்

**37.** மக்காவைத் தனது கட்டுப்பாட்டில் வைத்திருந்த அப்துல்லாஹ் பின் ஸுபைரை வெற்றி கொண்ட ஆட்சியாளர்
(1) B (2) C (3) D (4) F (5) H

**38.** மஹ்திய்யா, றபீகா முதலான நகரங்களை நிறுவியவர்
(1) A (2) B (3) D (4) F (5) H

**39.** 'தாருல் அத்ல்' என்ற பெயரில் நீதிமன்றம் ஒன்றை ஸ்தாபித்தவர்
(1) A (2) C (3) D (4) E (5) G

**40.** மங்கோலியர் அப்பாஸிய அரசைக் கைப்பற்றியபோது கலீபாவாக இருந்தவர்
(1) A (2) C (3) D (4) E (5) F

**41.** அப்பாஸிய கலீபாவினால் 'அமீருல் உமரா' எனும் பதவிப் பெயர் வழங்கப்பெற்றவர்
(1) A (2) C (3) E (4) F (5) H

[பக். 5 ஐப் பார்க்க

**42.** பின்வரும் கூற்றுகளைக் கருதுக.

A – தப்ஸீர் பிர் ர.'.யி, தப்ஸீர் பில் அஸ்ர் ஆகிய இரண்டும் ஒத்த கருத்துடையவை.
B – தப்ஸீர் பிர்ர.'.யி, தப்ஸீர் பித்திராயா என்றும் அழைக்கப்படும்.
C – தப்ஸீர் பில் அஸ்ர் முதலில் தோற்றம் பெற்ற தப்ஸீர் வகையாகும்.
D – தப்ஸீர் பித்திராயா தடைசெய்யப்பட்ட தப்ஸீர் வகையில் அடங்கும்.
E – தப்ஸீர் இபுனு கஸீர், தப்ஸீர் பில் அஸ்ருக்கு உதாரணமொன்றாகும்.

இவற்றுள் சரியான கூற்றுகளை உள்ளடக்கிய தொகுதி
(1) A, B, D (2) A, D, E (3) B, C, D (4) B, C, E (5) B, D, E

**43.** 'மல்பூழாத்' எனும் நூலைப் பிரதிநிதித்துவப்படுத்தும் சமகால இஸ்லாமிய த.'.வா அமைப்பு
(1) ஜமாஅதே இஸ்லாமி
(2) அன்ஸார் சுன்னத் அல்-முஹம்மதிய்யா
(3) ஜமாஅதுத் தப்லீ.'.
(4) ரிஸாலே நூர்
(5) இஃவானுல் முஸ்லிமீன்

**44.** கலீபாக்களான உமர் (ரழி), அலி (ரழி) ஆகியோரைக் கொலைசெய்த நபர்கள் முறையே
(1) புறக் பின் அப்துல்லாஹ், ஜுபைர் பின் முத்இம்
(2) உமையா பின் ஹலப், அபூ லு.'.லு.'.
(3) ஹாரித் பின் ஆமிர், அப்துர்ரஹ்மான் பின் முல்ஜிம்
(4) அபூ லு.'.லு.'., அம்ரு பின் பக்ர்
(5) அபூ லு.'.லு.'., அப்துர்ரஹ்மான் பின் முல்ஜிம்



**45.** பின்வருவோருள் உமையா வம்சத்தைச் சேர்ந்த ஆட்சியாளர்
(1) அபூஜ.'.பர் அல்-மன்ஸூர்
(2) ஸலாஹுத்தீன் ஐயூபி
(3) உமர் பின் அப்துல் அஸீஸ் (ரஹ்)
(4) முஹம்மத் அல்-பாதிஹ்
(5) அல்-வாஸிக் பில்லாஹி

● பின்வருவன இஸ்லாமிய உலகில் பிரபல்யமான கலைச்சொற்கள் சிலவாகும். இவற்றைப் பயன்படுத்தி **46 – 48** வரையிலான வினாக்களுக்கு விடை தருக.

| | | | |
|---|---|---|---|
| A – அல்-வரஉ | B – இல்லத் | C – முராகபா | D – முதஷாபிஹ் |
| E – மஸ்லஹா முர்ஸலா | F – தக்லீத் | G – இக்லாஸ் | H – பர்உ |
| I – மதன் | J – மர்தூத் | K – இஸ்மத் | L – அர்ரஜா |

**46.** தஸவ்வுப் உடன் தொடர்பான மூன்று சொற்கள்
(1) A, C, L (2) A, G, H (3) C, G, K (4) C, H, L (5) G, K, L

**47.** ஷிஆக்களின் பிரதான கோட்பாடுகளுள் ஒன்று
(1) B (2) C (3) G (4) H (5) K

**48.** கியாஸ் உடன் தொடர்புபடும் சொல்
(1) B (2) D (3) F (4) G (5) H

**49.** தபூக் யுத்தத்தின்போது நபியவர்கள் எதிர்பார்த்துக் கொண்டிருந்த ஸஹாபாக்களுள், போராட்டத்தில் கலந்து கொள்ளத் தவறிய மூவர்
(1) க.'.ப் பின் மாலிக், உமையா பின் ஹிஸ்ன், ஹிலால் பின் உமையா
(2) முராரா பின் ரபீ.'., ஸப்வான் பின் உமையா, மாலிக் பின் நுவைரா
(3) ஸப்வான் பின் உமையா, க.'.ப் பின் மாலிக், ழஹ்ஹாக் பின் ஸுப்யான்
(4) கைஸ் பின் ஆஸிம், அதீ பின் ஹாதிம், ஸியாத் பின் லுபைத்
(5) க.'.ப் பின் மாலிக், முராரா பின் ரபீ.'., ஹிலால் பின் உமையா

**50.** கிலாபத்தின் அமைதிக்குப் பங்கம் ஏற்படுத்தினார் எனக் காரணங்காட்டப்பட்டு கலீபா உஸ்மான் (ரழி) அவர்களால் நாடு கடத்தப்பட்டதாகக் கருதப்படும் ஸஹாபியின் பெயரும் கடத்தப்பட்ட இடமும் முறையே
(1) அபூதர் அல்-கிப்பாரி - றபாதா
(2) அம்று பின் ஆஸ் - தூமதுல் ஜன்தல்
(3) ஸ.'.த் பின் உபாதா - நஹ்ர்வான்
(4) முஆவியா பின் அபீ ஸுப்யான் - ஷாம்
(5) ஜ.'.பர் பின் அபீ தாலிப் - ஹபஷா

* * *

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2017 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தரப்) பரீட்சை, 2017 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2017

ඉස්ලාම් ශිෂ්ටාචාරය II
இஸ்லாமிய நாகரிகம் II
Islamic Civilization II

47 T II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
*Three hours*

**அறிவுறுத்தல்கள்:**

* பகுதி **I** இல் எவையேனும் **இரண்டு** வினாக்களையும், பகுதி **II** இல் எவையேனும் **மூன்று** வினாக்களையும் தெரிவுசெய்து, **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.
* ஒவ்வொரு வினாவுக்கும் **20** புள்ளிகள் உரித்தாகும்.

## பகுதி I

1. (i) 'இஜ்திஹாத் அங்கீகாரம் கொண்டது' என்பதைப் புலப்படுத்தும் அல்-குர்ஆன், அல்-ஹதீஸ் ஆதாரங்கள் ஒவ்வொன்றை எழுதுக.
   (ii) 'இஜ்திஹாதின் வாயில் மூடப்பட்டது' என்ற கருத்தினால் ஏற்பட்ட விளைவுகளைக் குறிப்பிடுக.
   (iii) 'அர்கானுல் கியாஸ்' பற்றி விளக்குக.
   (iv) 'தக்லீத்' என்பதனால் உணர்த்தப்படும் கருத்தை விபரிக்குக.
   (v) நவீன பிரச்சினைகளைத் தீர்ப்பதில் இஜ்திஹாதின் பங்களிப்பை மதிப்பிடுக.

2. (i) கலீபாக்களான உமர் (ரலி), உஸ்மான் (ரலி) ஆகியோர் கிலாபத்துக்குத் தெரிவு செய்யப்பட்ட முறை பற்றி சுருக்கமாகக் குறிப்பிடுக.
   (ii) கிலாபதுர் ராஷிதாவின் போது ஏற்பட்ட சாம்ராஜ்ய வியாபகம் பற்றி விளக்குக.
   (iii) ஸிப்பீன் யுத்தத்தினால் ஏற்பட்ட விளைவுகள் பற்றி விபரிக்குக.
   (iv) கலீபா உமர் (ரலி) அவர்கள் கிலாபத்தில் மேற்கொண்ட சீர்த்திருத்தங்கள் பற்றி விளக்குக.
   (v) கலீபா அலி (ரலி) இன் ஆட்சி பற்றி மதிப்பிடுக.

3. (i) இலங்கையில் இஸ்லாத்தின் அறிமுகத்தை ஆதாரபூர்வமாக எடுத்துக்காட்டுக.
   (ii) இலங்கை முஸ்லிம்களின், தேசத்துக்கான பங்களிப்பு பற்றி விபரிக்குக.
   (iii) தென்னிந்திய - இலங்கை முஸ்லிம் உறவு ஏற்படுத்திய விளைவுகளைப் பரிசீலிக்குக.
   (iv) இலங்கை முஸ்லிம் தனியார் சட்டத்தின் உள்ளடக்கம் பற்றி விபரிக்குக.
   (v) அறிஞர் எம். சி. சித்திலெப்பை அவர்களின் சமூகப் பங்களிப்பு பற்றி ஆராய்க.

## பகுதி II

4. (i) மருத்துவத்துறையில் முஸ்லிம்கள் ஈடுபடத் தூண்டிய காரணிகளை விளக்குக.
   (ii) வரலாற்றுத்துறை வளர்ச்சிக்கு முஸ்லிம்களின் பங்களிப்பை ஆராய்க.

5. (i) உமையா, அப்பாஸிய ஆட்சிகளில், நிர்வாகத்துறையில் காணத்தக்க ஒற்றுமை, வேற்றுமைகளை ஆராய்க.
   (ii) கலீபா ஹாறூன் ரஷிதின் ஆட்சியின் போது நாட்டில் ஏற்பட்ட அபிவிருத்திகள் பற்றியும் பாமகீக்களுடனான அவரது உறவு பற்றியும் விளக்குக.

6. (i) அகபா, ஹுதைபிய்யா உடன்படிக்கைகள் இஸ்லாத்தின் பரவலில் ஏற்படுத்திய தாக்கம் பற்றி விளக்குக.
   (ii) பிற நாகரிகங்களின் கலப்பால் இஸ்லாமிய உலகு அடைந்த **சாதக, பாதகங்கள்** பற்றி ஆராய்க.

7. (i) இஸ்லாமிய சமூக அமைப்புக்கும் ஜாஹிலிய்யா சமூக அமைப்புக்கும் இடையிலான வேறுபாடுகளை ஒப்பிட்டு விளக்குக.
   (ii) இஸ்லாமிய கிலாபத்தின் தேக்க நிலைக்கு வழியமைத்த காரணிகள் பற்றி விபரிக்குக.

8. (i) நபி முஹம்மத் (ஸல்) அவர்களின் காலத்தில் ஹதீஸ்கள் பாதுகாக்கப்பட்ட ஒழுங்கை ஆதாரபூர்வமாக விளக்குக.
   (ii) பிக்ஹுத் துறைக்கான இமாம் ஷாபிஈ (ரஹ்) அவர்களது பங்களிப்பை **அல்லது** ஹதீஸ் துறைக்கான இமாம் புஹாரி (ரஹ்) அவர்களது பங்களிப்பை மதிப்பிடுக.

* * *